கூடிய தவறுதலாகிய ஸ்வப்னம் முதலான அவஸ்தைகள்' என்று உரையிட்டிருக்கின்றார். ஆகிலும் "சலனமுண்டானாலும்" என்று "உம்" மையைச்சேர்த்து உபயோகித் திருப்பதால் அவ்வாக்கியம் ஜாக்கிராவஸ்தையில் சாவதானத் தன்மையை மட்டும் குறிக்குமென்று அறிய வேண்டும்.

இவ்விதத் தவறுதலின்மை அல்லது சாவதானத்தன்மையை யோகவாசிஷ்டத்தில் சிவ பூஜைகதையில் விரிவாய்ச் சொல்லியிருக்கக் காணலாம். விஷயபோகத்தால் ஆத்மாவுக் குண்டான ஆநந்தத்தையும் ஆத்மாவுக்கு அபேதமாய் அனுசந்தானம் செய்தலும், எவ்வாறு ஒருவன் வியாதிபால் பீடிக்கப்பட்டபோது துவர் கசப்புள்ள மருந்துகளை தேகத்தில் பூச அவ்வஸ்துக்கள் முதலில் வருத்தத்தைக் கொடுத்து பிறகு தேகத்திலெப்பொழுதும் ஸ்வபாவமாயுள்ள சுகத்தை நிலைநிறுத்துமோ அதுபோல் பிராரப்தகர்மவசத்தால் வரும் சுகதுக்கத்தையும், (அவை) கர்மக்ஷய மூலமாய்ப் பரிணாமசுகத்தைக் கொடுப்பதால் ஆத்மானந்தத்துக்கு அபேதமாய் பாவனை செய்வதுமே அபேத பாவனையில் மறுபடி கூட்டி வைக்கும் பாவனாபூஜை யென்கிற உபசாரம் என்பது வாசிஷ்டத்தின் சித்தாந்தம். ஸ்ரீசங்கராசார்யசுவாமிகளும் சௌந்தர்யலஹரி 27-வது சுலோகத்தில் இந்தக் கருத்தைக் கொண்டே பின்வருமாறு பிரார்த்திக்கின்றார்:- "நான் பேசுவதெல்லாம் ஜபமாகவும், என்னங்கங்களின் சேஷ்டைகளெல்லாம் முத்திரைகளைப் பிடித்தலாகவும், நடையே பிரதக்ஷிணம் செய்வதாகவும், நான் சாப்பிடுவதெல்லாம் ஆஹுதி செய்வதாகவும், கிடத்தலே நமஸ்காரமாகவும், எல்லாம் சுககரமாகவும், என்னிடம் நிகழும் எவ்வித விலாசமும் (கிரியையும்), ஓ! தேவியே, ஆத்மார்ப்பண புத்தியால் உன்னுடைய பூஜாபர்யாயமாகவேண்டும்."

ஆனால் இவ்வித பூஜை இராப்பகல் விடாமல் சாதிக்க வேண்டுவதானதாலும், மேல் காலநியமம் பாவனைக்கு விதித்திருப்பதற்கு விரோதமாகும். ஆகவே வேறு விதமாகவே இங்கு பாவனைகளைச் செய்யவேண்டும். அதன் பிரகாரம் யாதோவெனில், சொல்வோம்.

1. அபரிச்சின்னமாக பாவிக்கப்பட்ட ஸ்ரீ லளிதை ஸ்வ(தன்)மகிமையில் பிரதிஷ்டையே (நிலையாயிருப்பதே) ஆஸனம்.

2. "சகல பூதங்களும் அதன்பாதம்" என்கிற சுருதிப்படி பாதரூபமாயிருக்கும் ஆகாசம் முதலிய சகல ஸ்தூலப் பிரபஞ்சத்தில், மலரூபமாயிருக்கும் நாமரூப அம்சங்களை சச்சிதானந்த ஏகரூப பாவனையாகிய ஜலத்தால் அலம்புதலே பாத்யம்.

3. இவ்வாறே சூக்ஷ்மப் பிரபஞ்சமாகிய கையிலுள்ள நாமரூப அம்சங்களாகிய மலத்தைப் போக்குதல் அர்க்யம்.

4. இவ்வித பாவனா ரூபமாகிய ஜலத்தை கபளீகரணம் செய்தலே (விழுங்கி விடலே) ஆசமனம்.

5. சத்துவம், சித்துவம், ஆனந்தத்துவம்முதலிய சகல அவயவங்களிலும் அபேதமாகவே பாவனையாகிய ஜலத்தின் சம்பந்தமே ஸ்நானம்.

6. சத்துவம், சித்துவம், ஆனந்தத்துவம் முதலான அவயவங்களில் மேற்சொன்ன பாவனையாகிய ஜலசம்பந்தத்தால் உண்டாகிய சித்த விருத்திக்கு (ஸ்ரீ லளிதா தேவி) விஷயமாக விருக்கும் தன்மையால் உண்டாகும் ஆவரணமே (அதாவது மறைப்பே) வஸ்திரம்.

7. நிர்விஷயத்துவம், நிரஞ்ஜனத்துவம் இவை முதலான பிரஹ்மத்துக் கடையாளமாகவுள்ள தர்மங்களை தர்மியாகிய பிரஹ்மத்திற்கு அபேதமாகவே பாவித்தல் ஆபரணங்களாகும்.

8. தன் சரீரத்திலிருக்கும் பிருதிவீ அம்சத்தை, அதன் ஜடபாகத்தைப்போக்கி (நாம

ரூப பாகத்தைப்போக்கி) சச்சிதானந்த மாத்திரமாய் பாவித்தல் கந்தம்.

9. அவ்வாறே ஆகாசாம்சத்தைச் செய்தல் புஷ்பம்.

10. அவ்வாறே வாயு அம்சத்தைச்செய்தல் தூபம்.

11. அவ்வாறே அக்னி அம்சத்தைச்செய்தல் தீபம்.

12. அவ்வாறே சந்திரமண்டலத்திலிருக்கும் அமிருதமாகிய ஜலபாகத்தைச் செய்தல் நைவேத்யம்.

13. ஷோடசாந்தத்திலுள்ள சந்திரமண்டலத்தை அவ்வாறு செய்தலே தாம்பூலம்.

மேற்சொல்லிய கடைசியாகிய ஐந்துமே பஞ்ச பூஜையெனப்படும். யோகினீ ஹிருதயத்திலும் "உன்னை உன் மயமான நைவேத்யம் முதலானவைகளால் அர்ச்சிக்கவேண்டும்" என்றும், "ஜகத்து பஞ்சபூத மயமானது, நீயும் அம்மயமாய் இருக்கப்பட்டவள்" என்றும் சொன்னது இப்பஞ்சபூஜையைக் குறித்தே.

14. இப்பாவனையின் அங்கமாகிய தனதான பரை, பச்யந்தீ, மத்தியமை, வைகரீ, என்ற சப்தங்களை நாதவழியாய் பிரஹ்மத்தில் உபஸம்ஹாரம் (லயம்) ஆனதாய் பாவனைசெய்தலே ஸ்தோத்திரம்.

15. அங்கு மிங்கும் விஷயங்களில் தாவா நின்ற சித்தவிருத்திகளை விஷய சம்பந்தமான ஜடபாகத்தை (நாமரூப பாகத்தை) நீக்கி, (சச்சிதானந்த ரூபமாய் பாவித்து) பிரஹ்மத்தில் லயம் செய்வதே பிரதக்ஷிணம்.

16. விருத்திகளை விஷயங்களினின்றும் திருப்பி, பிரஹ்மமொன்றிலேயே பற்றி நிற்கும்படிச்செய்தல் நமஸ்காரம். ஷோடசோபசாரங்கள் இவ்விதமாகும்.

சில உபநிஷத் மூலபாடங்களில் "பாஹ்யாந்தக்கரணங்கள், (வெளி, உள் இந்திரியங்கள்) ஏக ரூபத்தில் நிற்பதே ஆஸனம்"—இவை முதலிய வாக்கியங்கள் காணப்படும். ஆகிலும் அவற்றுள் சில உபசாரங்கள் இங்கு சொல்லிய பாவனைக்கு ஒத்ததாக வில்லாததாலும், அநேக புஸ்தகங்களில் காணப்படாததாலும், தந்திரங்களில் அவ்வாறு உபப்பிரஹ்மணம் (விவரணம்) இல்லாததாலும் அவற்றை இவ்விடம் எடுத்துரைக்கப் படவில்லை என்று பாஸ்கராயர் சொல்கிறார்.

31. [உப] நான், நீ, இருக்கின்றது, இல்லை, செய்யத்தக்கது, செய்யத்தகாதது, உபாஸிக்கத்தக்கது என்கிற விகல்பங்களை ஆத்மாவில் லயம் செய்வதே ஹோமம். (31)

(குறிப்பு)—ஸ்ரீ சக்ரத்தில் பூர்வபாவனைகளில் சொல்லப்பட்ட சக்திகளைத் தவிர வேறு அளவற்ற சக்திகளுண்டு. அவ்வனந்த சக்திகளையும் ஸ்ரீதிரிபுரசுந்தரிக்கு அபேதமாகிய பாவனையைப் பயனாகவுடைய ஹோமபாவனையிவ்விடம் சொல்லப்பட்டது. அதனால்தான் நைவேத்தியத்தின் அங்கமாகிய ஹோமத்தை உபசாரங்களினின்றும் வேறுபடுத்தி தனியாய் இவ்விடம் கூறுவது பொருத்தமுள்ளதாகும். "நான்" என்று துவக்கிய (31, 32, 33) மூன்று வாக்கியங்களும் விசர்ஜன மென்கிற பூஜையின் முடிவாகிய உபசாரத்தைக் குறிப்பன வென்று ஏற்படும். "நான், நீ" என்பது அவ்வித வுணர்ச்சியை (விருத்தியை)க் குறிக்கும். "இருக்கின்றது, இல்லை" என்பது லௌகிக விதிநிஷேதங்களைக் குறிக்கும். "செய்யத்தக்கது, செய்யத்தகாதது" என்பது வேத கர்மகாண்டத்திலுள்ள வைதிக விதிநிஷேதங்களைக் குறிக்கும். — "உபாஸிக்கத்தக்கது" என்பது உபநிஷத்துக்களிலுள்ள விதிகளைக்குறிக்கும். உபாஸிக்கக் கூடாதென்று உபநிஷத்துக்களில் நிஷேதமில்லாததால் அதை இங்கு சொல்லவில்லை. இவ்வேழு பதங்களாலும் விருத்தியின் சாமக்கிரிகள் குறிக்கப்பட்

டன. ஆகவே விகல்பங்களை யெல்லாம் போக்கி அவ்விகல்பங்களுக்குக் காரணமான சக்திக்கூட்டத்தை பரதேவதையினிடம் லயமானதாகப் பாவிக்க வேண்டுமென்பது கருத்து.

32. [உப] பாவனா விஷயங்களின் அபேத பாவனை தர்ப்பணம். (32)

(குறிப்பு) ஸ்ரீகுருமுதல் ஹோமம் வரை கூறப்பட்டுள்ள பதார்த்தங்கள் எல்லாம் ஒன்றுக் கொன்று அபேதமென பாவிப்பதால், அப்பாவனைகளுக்கு விஷயமான தன்மையின் பேதத்தால் அவைகள் வஸ்துபேதமானவை யென்கிற பாவனையைநீக்கி நிர்விகல்ப துரீய அகண்ட விஷயதையை அடைந்து, அதையும் விடுத்து, ஸ்வாத்ம மாத்ரமாய் மிஞ்சுதல் தர்ப்பணத்தின் பாவனையாகும்.

[அவதாரிகை:—இதுகாறும் தேகமாகிய ஸ்ரீசக்கரத்தை ஸ்வாத்ம மாத்திரமாய் மிஞ்சும்படிச் செய்யவேண்டுவதைச் சொல்லி, அத்துடன் பஹிரங்க சம்பந்தமுடைய பிரபஞ்சத்தையும் ஆத்மாவில் லயப்படுத்தும் கிரமத்தை மேற் சொல்கின்றார்.]

33. [உப] பதினைந்து திதிரூபமாய் காலத்தின் பரிணமத்தை (மாறுதலை) அறிதல் (வேண்டும்). (33)

(குறிப்பு) I—பிரபஞ்சமானது (a) காலரூபம், (b) தேசரூபம், (c) (உபயரூபம்) அவ்விருரூபம் என மூவிதமாகும்.

I-(a) அதில் காலரூபமாவது—சந்திரமண்டலத்திலுள்ள சாதாக்ய மென்கிற ஷோடசியாகிய நித்திய கலையைத்தவிர 15-கலைகளுண்டு. அவைகளை சுருதியானது (தைத்திரீய பிராஹ்மணம் 3. 10. 1) (1) தர்சா, (2) திருஷ்டா, (3) தர்சதா, (4) விசுவரூபா, (5) ஸுதர்சனா, (6) ஆப்யாயமானா, (7) ஆப்யாயமானா, (8) ஆப்யாயா (9) ஸூன்ருதா, (10) இரா, (11) ஆபூர்யமாணா, (12) ஆபூர்யமாணா, (13) பூரயந்தி (14) பூர்ணா, (15) பௌர்ணமாஸீ எனப் பேரிட்டுச்சொல்லும். அவைகளே பிரதமை முதல் பௌர்ணமீ முடிய உள்ள திதிகள். திதிரூபமாகிய இவைகளே * (1) காமேசுவரீ, (2) பகமாலினீ, (3) நித்தியக்லின்னா, (4) பேருண்டா, (5) வஹ்னிவாஸினீ, (6) மஹாவித்யேசுவரீ, (7) சிவதூதீ, (8) துவரிதா, (9) குலசுந்தரீ, (10) நித்தியா, (11) நீலபதாகா, (12) விஜயா, (13) சர்வமங்களா, (14) ஜ்வாலாமாலினீ, (15) சித்ரா என்கிற பதினைந்து நித்யா தேவதைகளாகிய கலைகளுடன் அபின்னம். சாதாக்யகலை என்கிற நித்யகலையே ஸ்ரீலலிதை. எப்பொழுதும் புண்டு கொண்டிருக்கும் இவ்வித காலரூபமான திதிசக்கிரத்தின் மத்தியிலேயே ஸ்ரீசக்ரம் நிற்கும், வெளியிலல்ல.

I-(b) தேசரூபமாகிய பிரபஞ்சமாவது—பூகோளத்தின் வடபாகத்தில் (1) மேருபர்வதம் இருக்கின்றது. அதன் தென்பாகத்தில் (2) ஜம்பு, (3) ப்லக்ஷ, (4) சால்மலி, (5) குச, (6) க்ரௌஞ்ச, (7) சாக, (8) புஷ்கரங்களெனப் படும் எழுத்வீபங்கள் இருக்கின்றன. அவற்றில் ஒவ்வொன்றினிடையே பூகோளத்தைச் சுற்றிக்கொண்டு (9) லவண (உப்பு), (10) இக்ஷு (கரும்புச்சார்), (11) ஸுரா (சாராயம்), (12) ஸர்பிஸ் (தயிர்), (13) மது (தேன்), (14) க்ஷீரம் (பால்) களென்ற ஆறு சமுத்திரங்களுண்டு. பௌஷ்கர துவீபத்திற்கு வெளியில (15) மதுரமான தீர்த்தம் (ஜலம்) நிறைந்த சமுத்திரம் ஏழாவது. அதற்கும் தெற்கே (16) பரமவியோமம் (பரமாகாசம்) இருக்கும். ஆகப் பதினறு தேவதைகள்.

மேருமுதல் பரமவியோமம் வரையுள்ள 16 தேவதைகளும் கிரமமாக லலிதையாகிய சாதாக்ய அல்லது நித்யகலைமுதல் சித்திராகலை வரையுள்ள கலைகளோடு அபின்னம். இவை இந்தக்

* இந்நித்யாதேவதைகளின் பெயர்களை தந்திரங்களில் கொஞ்சம் மாற்றிச் சொல்வதுமுண்டு.

கிரமமாய் யுகத்தின் முதல் வருஷத்தில் நிற்கின்றன. இரண்டாம் வருஷத்தில் ஜம்பூதுவீப முதல் மேருவரை யிருக்கின்றன. மூன்றும் வருஷத்தில் லவண சமுத்திரமுதல் ஜம்பூத்வீபம்வரை நிற்கின்றன. பதினாறாவது வருஷத்தில் பரமவியோமம் துடங்கி மதுரஜல சமுத்திரம்வரை லளிதை முதலாகிய 16-கலைகளும் நிற்கின்றன. 16, 16 வருஷங்களில் ஒவ்வோர் நித்யா தேவதைகளாகிய கலைகளுக்கு ஓரோர் சுற்று ஆகும். இவ்வாறாகிய தேசரூபமாகிய சக்ரத்தினுள்ளேதான் ஸ்ரீசக்ர மிருக்கின்றது. வெளியிலல்ல.

I(c)உபயரூப பிரபஞ்சமாவது:—பூகோளத்திற்கு மேலும் கீழுமாக வட்டமாய் சந்திர, புத, சுக்கிர, சூர்ய, குஜ, குரு, சனி, நக்ஷத்திரங்கள் இவைகளின் மண்டலங்கள் எட்டு, இவைகள் ஒவ்வொன்றின் மத்தியிலுள்ள இடைவெளிகள் எட்டு. ஆகப்பதினறு தேசங்கள் காலசக்ர ரூபமாயிருக்கின்றன. இந்த ஸ்தானங்களில் தேச பரிவிருத்திக்கு (சுற்றுதலுக்கு) விபரீதமாக நித்தியதேவதைகள் சுற்றுகின்றன. இச்சக்கரத்தின் உள்ளாகவே ஸ்ரீசக்ரம் நிற்கின்றது, வெளியிலல்ல.

இம்மூவித சக்ரத்திற்கும் பாரமார்த்திகரூபம் (உண்மைரூபம்) நித்தியாசக்ரமே. பிரஹ்மத்திற்கு வேறாகியவெல்லாம் தேசகாலசம்பந்த முள்ளனவாதலால் சகல பிரபஞ்சமும் நித்தியா தேவதைகள் ரூபமே. அவைகளை ஆத்மாவுக்கு அபேதமாக பாவித்தலே இங்கு விதிக்கப்பட்டிருக்கின்றது.

மூலத்திலும் இவ்வாக்கியத்திற்கு உபப்பிரஹ்மணமாகிய தந்திரராஜவாக்கியத்திலும் காலத்தைமட்டும் சொன்னதின் கருத்தென்னவென்றால், காலம்தானே சகல பிரபஞ்சமாக பரிணமித்திருக்கின்றது என்கிற பாவனையினாலேயே மற்றுள்ள 15-நித்தியா தேவதைகளின் பாவனையாகும் என்பதே.

II—வாஸ்தவத்தில் சகலசக்திகளும் 21,600 சுவாஸமாகிய காலரூபமானவைகள். அதன் சமஷ்டியை விக்ரஹமாக (சரீரமாக, ரூபமாக) உடையவள் ஸ்ரீலளிதை. மற்றுள்ள 15-நித்தியா தேவதைகளும் வியஷ்டிரூபமாய் ஒவ்வொன்றும் 1440-சுவாஸரூபமாய் இருப்பன. அவைகளை அவ்வாறு பாவிக்கவேண்டு மென்பது பொருள்.

இவ்விருபக்ஷமாகிய பாவனையை ஆவரண பூஜைக்குப் பிறகு செய்யவேண்டுமென்று சிலர் சொல்லுவர். அவர் அப்படிச் சொல்லுவது பாஹ்ய பூஜையில் அதுவே ஸ்தானமானதாலும் சகலத்தையும் லயம்செய்தபிறகு வேறுபாவனைக்கு இடமில்லை யென்பதையும்கொண்டு அவ்வாறு சொல்கிறார்கள். வாஸ்தவத்தில் ஆத்மபாமாத்திரமாய் மனம் ஸ்தம்பித்து நிற்கவே சுவாஸமும் அவசியம் ஸ்தம்பனமாகுமாதலால், பாதேவதையின் ரச்மிகளாகிய (கிரணங்களாகிய) நித்தியா கலைகளை லயப்படுத்த பூஜையின் விஸர்ஜன காலமே உசிதமானதாலும், மனம், சுவாசம் இவ்விரண்டையும் லயம் செய்தபிற்பாடு காலத்திற்கு லயம் செய்வது இவ்விடத்தில் வருவதுதான் யுக்தமானதாலும், அப்படியர்த்தம்செய்யாவிடில் வாக்கியம் இவ்விடம்நிரர்த்தகமாய் ஆகிவிடுமாதலாலும்,நித்தியா பாவனை இவ்விடமே செய்யவேண்டியது யுக்தமாகும். திதி சக்ரம், காலசக்ரம், தேசசக்ரம் இவையெல்லாம் நாமரூபத்தை யுடையனவல்ல, சகலமும் அஸ்தி பாதி பிரியமானவை (சச்சிதானந்த மானவை,) ஆகவே யெல்லாம் பிரஹ்மமயமே என்கிற பாவனை இவ்விடம் சொல்லப்பட்டது.

(அவதாரிகை) இவ்விதம் உள்ளும் புறம்புமுள்ள அகிலப்பிரபஞ்சத்தையும் லயம் செய்து ஸ்வாத்ம மாத்திரமாய் மிஞ்சுதலாகிய பாவனையானது இராப்பகல் விடாமல் தைலதாரையைப் போல் இடைவிடாமல் செய்யவேண்டுமென்பதைக் காட்டுவான் வேண்டி அவ்வாறு செய்ய சக்தியில்லாதவர் விஷயத்தில் உத்தம,

மத்திம, அதம சாதகபேதத்தால் மூன்று வித கால நியமத்தைக் கூறுகின்றார்.

34. [உப] இவ்வாறு மூன்று முகூர்த்தமோ, இரண்டு முகூர்த்தமோ, ஒரு முகூர்த்த மாத்திரமோ பாவனுபரனனவன் ஜீவன்முக்தனுகின்றான். அவனே சிவயோகி யென்று சொல்லப்படுகின்றான். (34)

(குறிப்பு)—உபநிஷத்திலுள்ள "இவ்வாறு" என்கிறதால் அடுத்து முன் கூறப்பட்டதும், ஸ்வாத்ம மாத்திரத்தை விஷயமாயுடையதும், சுவாஸ ஸ்தம்பத்தோடு கூடிய நிர்விகல்ப விருத்தி கூறப்பட்டிருக்கின்றது. இவ்வித பாவனையில் ஆசக்தனுயிருப்பவன் (பிரியமுள்ளவனுயிருப்பவன்) அதாவது மற்ற வியாபாரமில்லாதவனுயிருப்பவன் அதாவது தைலதாரைபோல் விடாத பாவனையை யுடையவன் சீக்கிரத்திலேயே ஜீவன் முக்தியாகிய பலத்தை யனுபவிப்போனுவன். சிவயோகிகளென்று சொல்லப்படும் ஜைகீஷவ்யர் முதலானவர்கள் இவ்வித பாவனை யுடையவர்களாதலால் அவர்களடைந்த பதவியை யடைய இப்பாவனை வேண்டுமென்பது கருத்து.

மூவேதங்களும் பஹிரங்கமாகிய கர்மத்தைப் பிரதிபாதிக்கும். நான்காவதாகிய அதர்வ வேதமோ பெரும்பான்மையும் அந்தரங்க கர்மங்களையே பிரதிபாதிக்கும். அவ்வதர்வவேதத்தின் சிரமாகிய இவ்வுபநிஷத்தோ மிகவும் அந்தரங்கமாகிய பாவனையைச் சொல்கின்றது.

35. [உப] காதிமதத்தால் அந்தர் சக்ர பாவனைகள் (அந்தர் முகமான சக்ரங்களில் பாவனைகள்) சொல்லப்பட்டன. (35)

36. [உப] யாவனொருவன் இங்ஙன மறிகின்றானே அவன் அதர்வ சிரஸை அத்தியயனம் செய்கின்றவன். (36)

(குறிப்பு):—இவ்வுபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கும் சக்கரங்களின் பாவனைகள் காதி யெனப்படும் சக்தி மதத்தை யனுசரித்தே சொல்லப்பட்டன; கௌளமதத்தை யனுசரித்தனவல்ல. இவ்வுபநிஷத்து இவ்வித பாவனையைப் பிரதிபாதிக்கின்றது என்று பதம் பதமாகவும், வாக்யம் வாக்யமாகவும் எவன் அர்த்தத்தை அறிந்து அனுசந்தானம் செய்கின்றானோ அவன் அதர்வசிரஸாகிய இந்த உபநிஷத்தை அத்தியயனம் செய்தவனாவான்.

மு. கோ. நாராயணஸ்வாமி ஐயர்.
விசுவேசுவரசாஸ்திரி மஹோபாத்தியாயர்.
ஸ்ரீ பரதேவதாயை நம꞉.
முற்றும்.

———(:-o-:)———

## NOTE ON ASTROLOGY.
## சோதிட சாஸ்திரக் குறிப்பு.

சோதிட சாஸ்திரமென்பது வேதாங்கம் ஆறில் ஒன்றாகக் கூறப்பட்டிருக்கிறது. இதைப் பற்றி ஒருவர் செந்தமிழ்ப் பத்திரிகைக்கெழுதியிருப்பதில் சோதிடத்தின் அங்கங்களைப்பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்:—

"சோதிடமென்பது ஒரு பெரிய நூல். அது நான்கு அங்கங்களுடையது. அவையாவன:—1. சோதிட சம்பந்தமான கணிதங்கள்: இது சகோள (வான) சாஸ்திர மெனப்படும்; ஸித்தாந்தம் என்பது இதற்கே பெயர்.

2. ஜாதகம்; 3. முகூர்த்தம் (சுபகாலங்களைத் தெரிவிப்பது); 4. பிரச்னை (கேட்ட கேள்விகளைக் கொண்டு குறி சொல்வது.)

சோதிட சாஸ்திரத்தில் முக்கியமான அம்சங்கள் மூன்று, அவை (1) காலம், (2) தேசம் (இடம்), (3) கிரஹங்கள். பாரமார்த்திகமாக விசாரிக்குமிடத்து, தேசமே பிரகிருதியாகும், காலமே கர்மமாகும், கிரஹங்களே ஆத்மாவாகு மென்று சொல்கிறார்.

"சோதிடஞானம்" என்கிற தலைப்பின் கீழ் அவர் பின்வருமாறு எழுதுகிறார்:—"பூர்வத்தில் நம்மவர்கள் வான சாஸ்திரத்தையும் அதை யனுசரித்துச் சோதிடத்தையும் மிகவாகப்பயின்று வந்தார்கள். பரப்பிரஹ்ம வஸ்துவைத் தெரிந்து கொள்வதற்கு ஜ்யோ

திஷ சாஸ்திரஞானம் அவசியமென்பது அவரது கொள்கை. வேதத்துக்குரிய ஆறு அங்கங்களுள் சோதிடமும் ஒன்றாகும். சோதிட நூற்பழக்கமில்லாவிடின், வேதத்திற் சிற்சில பாகங்களின், முக்கியமாக மந்திரபாகங்களின், பொருள் விளங்காது என்பர். கர்ம சாஸ்திரங்களின்படி. ஒவ்வொருவருக்கும் பிறப்பு முதற்கொண்டு பதினாறு அந்தஸ்துக்கள் ('ஸம்ஸ்காரங்கள்' என்பர் இவற்றை)ஏற்படுகின்றன. இந்த அந்தஸ்துக்கள் ஒவ்வொன்றாகப் பிராப்தமாகும்போது ஒவ்வொரு கருமம் செய்வதுண்டு. இந்தக் கர்மங்களுக்கு ஷோடச (16) கர்மங்கள் என்று பேர். இவற்றுள் உபநயநமும், விவாஹமும் முக்கியமானவைகளாகும். இந்தக் கருமங்களின் சம்பந்தமான மந்திரங்கள் ஒவ்வொன்றிலும், ஸந்தியா வந்தனம் முதலிய நித்திய கருமங்களிலும், நக்ஷத்திரங்கள் சூரிய சந்திரர்களின் சாரம் (அசைவு, ஓட்டம்), கிரஹங்கள், பஞ்சபூதங்களின் அதிதேவதைகள் ஆகிய இவை சம்பந்தமான விஷயங்கள் குறிக்கப்பட்டிருன்றன. ஆகையால் இவைகளைப்பற்றித் தெரிந்து கொண்டாலன்றி நாம் அந்த மந்திரங்களின் பிரயோஜனத்தை யறியமாட்டோம். இதை உத்தேசித்தே நம்மவர் சோதிட நூலைப்பயில ஆரம்பித்தனர்; அல்லாது, பணஞ் சம்பாதிக்கும் பொருட்டும், வினோதத்தின் பொருட்டுமென்று."

சோதிடம் யாருக்குப் பயன் படுமென்பதைப்பற்றி ஆன்மாக்களை மூவகையாகப் பிரித்து, உத்தமர்களான பகவத் பக்தர்களையும், அதமர்களான பரலோகத்தின் ஞாபகமே கிடையாத மூடத்தனமான தன்னயக் கொள்கையுள்ள நாஸ்திகர்களையும் தள்ளி, ஆஸ்திக புத்தியுள்ள ஸம்ஸாரிகளான மத்தியம அதிகாரிகளுக்கே பயன்படும் என்று கூறுகிறார். உத்தம அதிகாரிகளுக்கு ஜோதிஷம் ஏன் அவசியமில்லையென்றால், சொல்கிறார்:—

"எப்பொழுதும் ஈசுவரனையே தியானித்துக் கொண்டு, பக்தியிற் சிறந்து யோகமார்க்கத்திலிருக்கும் மகான்களுக்கு நல்ல காலம் என்பதும் கெட்டகாலம் என்பதும் இல்லை. ஒவ்வொரு நிமிஷமும் அவர்களுக்கு நல்லகாலமே யாகும். அவர்கள் நன்மை தீமை சுகம் துக்கம் என்கிற இரட்டைகளைக் கடந்தவர்கள்."

உத்தமாதிகாரிகள் என்பவர் மனோஜயம் பெற்றவர்கள்; ஸத்யசங்கல்பரான அவர்களுக்கு நினைத்தது தானே பலிக்கும். "மனோஜயந்து மாண்டவ்யம்", என்கிறபடி, மனதில் ஒருகாரியம் ஜயமாகுமென்கிற திடம் எப்போ உண்டாகிறதோ, அதுவே அவர்களுக்கு நல்ல முகூர்த்தம். ஏனெனில் "அண்ட பிண்ட ஸமத்துவ" ஞானவிசேஷத்தாலே யென்க. சஞ்சல சித்தமுடையவர்கள்,ஜீவயாத்திரையில் "வரும் வழி போம்வழி மாயாவழி"யறியாத ஸம்ஸார சித்தர்கள் கிரஹசாரங்களை யறிந்து நடந்துகொள்ளவேண்டும். வழிதெரியாதவன் வழியில்காணு மவர்களையெல்லாம் வழிசேட்டுத் தெரிந்துகொண்டும், இராப்பகல் என்கிற வித்தியாஸம் பார்த்துக்கொண்டும், அனுகூல பிரதிகூலங்களை யுத்தேசித்து வழி நடக்கிறான். "முற்றும் வழிநடந்து முழுவழியுந் தானறிந்தவன்" நேர்வழிபோனாலும் சரி, குறுக்குவழிபோனாலும்சரி, சாதனசாத்தியமறிந்து குறித்தஇடம்போய்ச்சேருவான். அப்படியேபோல, பிண்டத்திவ் உண்மையைக் கண்டவன், அண்டத்திலும் அந்த உண்மையை உள்ளபடி யறிவான். மூடனோ சொல்லியுமறியான்.

கடைசியாகத் தீர்க்காலோசனை செய்துபார்க்கில் நிச்சயம் உதித்தவன் எப்படியும் லக்ஷியம் தவறான். உத்தமாதிகாரிகள் சிரவணமநந நிதித்தியாஸனங்களால் நிச்சயம் (அனுபவநிச்சயம்) உணர்ந்தவர்களாதலால், அவர்கள் எதுவரினும் மனதைத் திருத்திக்கொண்டு கர்மானுபவம் தவறாது காரியத்தை நடத்திக்கொண்டு போவார். அவர்களுக்கு லக்ஷியமெல்லாம் காரணத்திலே யாதலால், காரியம் காரணம் போல் கூடி வரும்.

நிச்சய புத்தியில்லாத சஞ்சல. சித்தர்களுக்கு எப்பொழுதும் சமுசயம் விடாது. அந்தச்சமுசயம் ஒழிய இது ஒரு வழியாமேயன்றி வேறு இதில் விசேஷமில்லை. விதைவிதைத்தவன் பலனறுக்கிறான். கர்மவிதியை மாற்ற யாராலும் முடியாது. கர்மம் ஞானத்தால் நசியும். அப்படியென்றால், நிஷ்காமகர்மம் செய்யக்கற்றவரே கர்மபந்தத்துக் காளாகாது தப்புவார்; மற்றவர்களெல்லாரும் கர்மபந்தத்துக்குக் கட்டுப்பட்டவர்களே! வியாதியினால் பயங்கொண்டு மரணத்துக்கஞ்சி நடுங்குமவனுக்கு வைத்தியன் தைரியம் சொல்வதுபோல், சஞ்சலபுத்தியால் நிச்சயம் ஏற்படாதவர்களுக்கு ஜோதிஷநூல் வல்லோர் அண்டத்தைப் பிளந்து பிண்டத்தைத் திருத்தும் வழிசொல்வர். ஆனால் அண்டத்தைப் பிளக்கவல்லவர் யார்? என்று

சற்றுயோசித்துப் பார்க்கவேண்டும். ககோள சாஸ்திரம் கற்றதனால் மட்டும் ஜோதிஷம் கைவந்ததாகாது. ககோள சாஸ்திரத்தையறிந்து அண்ட பிண்ட சமத்துவத்தையும் உள்ளபடி யுணர்ந்து எதையும் "அஹம், இதம்" என்கிற அபிமானம் விட்டு பாரமார்த்திகமாகப் பார்த்து உணரவல்லராக விருக்கவேண்டும். இவர்களே உண்மையான திரிகாலஞானிகளாவார். மற்றவர்களெல்லாம் ஏதோ கற்றுக் குட்டிகள் கைப்பாகமாகச் சோதிடநூலைக் கையாண்டு வருகிறார்கள். அவர்களைப்பற்றி நாம் ஒன்றுஞ் சொல்ல வரவில்லை. ——:-:——

## "விவேகசிந்தாமணியின் மடந்தைப்பருவம்"

### என்ற இருச்சொல்லலங்கார விடுகதைவினு.

நொண்டிச்சிந்து.

தெந்தினத்தின தின ஞ-தினன தின
தெந்தினத்தின தின தின தின ஞ

கண்ணிகள்.

(1 தண்டிகையின்பெயரொன்று-நதியிலொன்று
தாமமிகுங்கோபுரப்பெயரொன்று
வண்டடர்மாலைப்பேரொன்று சிவன்பேரொன்று
வையமிசைசத்தத்தின்பெயரொன்று
மண்டலஞ்சொல்தூர்க்கையின்பேர்தன்னிலொன்
மாதவசுப்பிரமண்யதலமொன்று [று
கண்டனைவருந் துதிசெய்-மாமலையொன்று
காசினிபுகழும்வெற்றிப்பெயரொன்று ...(தெந்)
(2)நன்மதியின்பெயரொன்று-பூமிப்பேரொன்று
ஞாலமிசைசுரங்கத்தின்பெயரொன்று
தன்மையின்பெயரொன்று இடைவேற்றுப்பேர்
தனிலொன்று குருவியின்பெயரொன்று
வன்மையுளமீ ஞென்று நன்மைப்பேரொன்று
வண்புகழ்சேர்வேடுவர்கோன்பெயரொன்று
பன்மையுளபதங்கள்முற்றும் மூவெழுத்தெனப்
பகருவரப்பதங்கள்தனையறிந்து ... (தெந்)
(3)நட்டமில்லாநடுவணையி லுள்ளவெழுத்தை
ஞாலமிசைவரிசையாயெழுதிப்பார்க்கத்
திட்டமுடன்[விவேகசிந்தா]மா[மணியின்]
றிவ்விய[மடந்தைப்பருவம்] எனவே
சட்டமுடனேயுரைக்கும்-நவதசப
தங்களிஞறியந்தவக்ஷரங்களால்
இட்டமிகுங்கிரணப்பெயர்-தன்னிலொன்று
இந்திரன்பேரொன்றுவாட்பேரொன்று (தெந்)
(4)மாதவப்பெயரொன்று-தீர்த்தப்பேரொன்று
வயமாவின்பேரொன்றுபசுப்பேரொன்று
பூதலத்திலழகின்பெயர்தன்னிலொன்று
பூஜிதமிகுங்கல்விப்பேரொன்று
சாதன மஸ்துவின்பேர்தன்னிலொன்று
தாரணியிலறிஞன்பெயரொன்று
கோதிலாதபூமியின்பேர்தன்னிலொன்று
கோலமிகும்பார்வதிபெயரொன்று ... (தெந்)
(5)வையமிசை-பேதைமை-எனும்-பதப்பேரொன்று
வடிவத்தின்பெயரொன்றுசெல்வப்பெயரொன்று
தூய்யகாசிபன்மனைவி-தன்னிலொன்று
சுருதிசொல்லலங்காரப்பெயரிலொன்று
ஐயமில்லாமஹமதியர்-தீர்க்கதரிசி
அபிதானமொன்றுறுதியாகக்கூறும்
மெய்மையுடனிப்பொருளையறிந்துவிடை
விளம்புவீர்செந்தமிழ்வல்லோரே. (தெந்)

### விடைப்பதமாவது.

| | | |
|---|---|---|
| 1. | தண்டிகைப்பேரொன்று | சி-வி-கை |
| 2. | நதியொன்று | கா-வே-ரி |
| 3. | கோபுரப்பேரொன்று | சி-கு-ரி |
| 4. | மாலைப்பேரொன்று | வா-சி-கை |
| 5. | சிவன்பேரொன்று | ந-ந்-தி |
| 6. | சத்தப்பேரொன்று | ஆ-தா-லி |
| 7. | தூர்க்கைபேரொன்று | ச-ம-ரி |
| 8. | சுப்ரமண்யர்தலம்ஒன்று | த-ணி-கை |
| 9. | மலையொன்று | ச-யி-லை |
| 10. | வெற்றிப்பேரொன்று | வெ-ன்-றி |
| 11. | நன்மதிப்பேரொன்று | சு-ம-தி |
| 12. | பூமிப்பேரொன்று | பு-ட-வி |
| 13. | சுரங்கப்பேரொன்று | ச-ந்-தி |
| 14. | சுபாவப்பேரொன்று | பே-தை-மை |
| 15. | இடைவேற்றுப்பேரொன்று | வ-ப்-பு |
| 16. | குருவிப்பேரொன்று | வி-ப-தி |
| 17. | மீனென்று | தி-ரு-தி |
| 18. | நன்மைப்பேரொன்று | அ-வ-னி |
| 19. | வேடுவர்கோன்பேரொன்று | ந-ம்-பி |

மடந்தைப்பருவம் 19-வயதுக்கு முள்ள மேற்கண்ட 19-பதங்களின் நடுவெழுத்தை யெடுத்து வரிசைக் கிரமமாக வெழுதி வாசித்துப்பார்க்க "விவேகசிந்தாமணியின் மடந்தைப்பருவம்" என்றாகும்.

மேற்கண்ட பதங்களின் ஆதியந்த அக்ஷரப் பதங்களாவன:—

1. (சிகை) யென்பது கிரணம்
2. (காரி) யென்பது இந்திரன்
3. (சிரி) யென்பது வாள்
4. (வாகை) யென்பது தவம்
5. (நதி) யென்பது தீர்த்தம்
6. (ஆளி) யென்பது சிங்கம்
7. (சரி) யென்பது பசு
8. (தகை) யென்பது அழகு
9. (கலை) யென்பது கல்வி
10. (வெறி) யென்பது மஸ்து
11. (சுதி) யென்பது அறிஞன்
12. (புவி) யென்பது பூமி
13. (சதி) யென்பது பார்வதி
14. (பேதைமை) யென்பது பேதைமை
15. (வபு) வென்பது உடல்
16. (விதி) யென்பது செல்வம்
17. (திதி) யென்பது காசிபன் மனைவி யொன்று
18. (அணி) யென்பது அலங்காரம்
19. (நபி) யென்பது தீர்க்கதரிசியாம்.

—:-o-:— V. M. R. A.

## The Hon'ble Sri Gopala Krishna Gokhale in Madras.

## கனம் ஸ்ரீ. கோபால கிருஷ்ண கோகலே.

—:-:—

கனம் ஸ்ரீ கோபால கிருஷ்ண கோகலேயவர்கள் ஜூலைமீ 22உ சனிக்கிழமை காலையில் சென்னைக்கு விஜயமாய் வந்திருந்து மூன்றுநாள் தங்கிவிட்டு செவ்வாய்க்கிழமை சாயந்திரம் மெயில் வண்டியில் புனாவுக்குத் திரும்பிச் சென்றார்.

இவர் இப்பொழுது இராஜப்பிரதிநிதி யவர்களுடைய சட்டநிரூபண சபையில் இந்தியாவில் பிரதம வித்தையை 6-வயதுமுதல் 10-வயது வரையிலுள்ள ஆண்குழந்தைகளெல்லாருக்கும் போதிக்க வேண்டுமென்கிற கட்டாயமான சட்டநிபந்தனையொன்று இருக்கவேண்டுமென்று அதற்காக ஒரு மசோதா ஆலோசனைக்குக் கொண்டுவந்திருக்கிறார். அந்த மசோதா சட்டமாகச் செய்யப்படவேண்டியதற் கனுகூலமாக ஜனங்கள் அபிப்பிராயம் கொள்ளவேண்டுமென்று அதற்காகப் பாடுபட்டுழைத்து வருகிறார். இச்சென்னையிலும் அவருடைய கொள்கையை யங்கீகரித்துப்பிரதமவித்யானுகூலசங்கமொன்று ஸர். எஸ். சுப்பிரமணிய ஐயர் அவர்கள் தலைவராகவிருக்க ஏற்பட்டிருக்கிறது. அச்சங்கத்தார் சனிக்கிழமை சாயங்காலம் அரங்கேற்று சபையொன்று விக்டோரியா பப்ளிக் ஹாலில் கூட்டி, அச்சபையில் கனம் ஸ்ரீ கோபால கிருஷ்ண கோகலே யவர்கள் கூடவிருக்க அவருடைய மசோதாவை யாதரித்து அங்கீகரிப்பதாக ஒருதீர்மானம் செய்தார்கள். அத்தீர்மானம் செய்தபிறகு, ஸ்ரீ கோபால கிருஷ்ண கோகலேயவர்கள் பிரதம வித்யாபோதனை 6-வயதுமுதல் 10-வயதுவரையிலுள்ள ஆண்பிள்ளைகளுக்கெல்லாம் கட்டாயமாகப் போதிக்கப்படவேண்டுமென்கிற சட்டநிபந்தனை யொன்றிருக்கவேண்டியதைப்பற்றியும், அதனால் தேசத்துக்கு விளையக்கூடிய நன்மையைப்பற்றியும், ஓர் திவ்யப் பிரசங்கம் செய்தார்.

மறுநாள் ஞாயிற்றுக்கிழமையன்று சாயந்திரம் பொதுஜனவாழ்வு சம்பந்தமாய் நம்மவர்களிடத்துள்ள குறைகளையும் அதன் பொறுப்புகளைப்பற்றியும் ஒரு திவ்யப்ரசங்கஞ் செய்தார். இவர் செய்யும் பிரசங்கங்களை திவ்யப் பிரசங்கங்கள் என்று சொல்வது உபசாரம்பற்றியல்ல. இவர் உள்ளபடி உண்மையான ஆத்மதீக்ஷை பெற்றவர். பம்பாய்ஹைகோர்ட்டுஜட்ஜாயிருந்த ஸ்ரீ மஹாதேவ கோவிந்த ரனடே யவர்களிடம் சிக்ஷை பெற்றவர் இவர். ஆத்ம தீக்ஷையும் அதற்குவேண்டிய சிக்ஷையும் பெற்றவராதலால் இவர் வாயினின்று வரும் வார்த்தைகள் திவ்யலக்ஷணம் பொருந்தியவையாயிருப்பது அதிசயமில்லை. ஆனால் இவர் துரைத்தன விஷ

யங்களில் புகுந்துகொண்டுழைக்க ஆரம்பித்த பின் "யதார்த்தவாதி வெகுஜந விரோதி" யென்கிற உண்மையை யறிந்தவராய், காரணம் பற்றி உழைப்பவராயினும், காரியவழிபோயிருந்துழைக்கவேண்டுமென்கிற கொள்கையும் கொண்டுள்ளாரென்று தெரிகிறது. காரணமின்றிக் காரியமில்லையாயினும் காரியவாதம் செய்யப்புகின் காரணத்துக்கு எப்படியும் ஒருகுறை ஏற்படுமென்பது இவர் விஷயத்தில் உண்மையாக விளங்குகிறது.

காரியமென்பது காலதேச வர்த்தமானங்களுக்குட்பட்டது. காரணமென்பது காலதேச வர்த்தமானங்களுக்கு அதீதமாய் நித்தியமாய் ஸத்தியமாய் நிரந்தரமாய் உள்ளது. காரணத்தைக்கொண்டு காரியத்தை எளிதில் சாதித்துக்கொள்ளலாம். காரியத்தைக் கொண்டு காரணத்தைச் சாதித்துக்கொள்வது சாத்தியமானாலும், அது மிகவும் துர்லபமென்று சொல்லக்கூடியபடி அவ்வளவு கஷ்ட சாத்தியமாயிருக்கிறது.

காரண காரிய தோரணை யறிந்தவரே மாயை மயக்கொழிந்து மஹத்தென்னும் பெரிய மனது கொண்டுழைக்க வல்லவராவர். காரியத்தைக் கொண்டு காரணத்தை யளக்க முயலுவோர் உழக்கைக்கொண்டு சமுத்திர ஜலத்தை யளக்க முயலுமவர்க்கு ஒப்பாவர். "பலதுளி பெருவெள்ளம்" "எறும்பூறக் கல்லுந்தேயும்" என்ற பழமொழிகள் இருப்பதாலும், "எறும்பும் தன் கையால் எண் சாண்," என்ற ஔவை வாக்கினாலும், காலக்கிரமத்தில் எறும்பும் பிரமாவாகலாம். இந்தவுண்மையை வற்புறுத்தவே, முக்திக்குவழி யிரண்டென்றுகூறி, அவற்றைப் பக்ஷிமார்க்கமென்றும் பிபீலிக (எறும்பு) மார்க்கமென்றும் வகுத்துக் கூறினர் மேலோர். பக்ஷி மார்க்கத்தை சுகமார்க்கம் என்றும், எறும்பு மார்க்கத்தை வாமதேவர் மார்க்கமென்றும், இவ்விருவகை மார்க்கங்களைத் தவிர முக்திக்கு வேறு மார்க்கங்களில்லை யென்றும் உபநிஷத்துகள் முறையிட்டுக் கூறுகின்றன. சுகமார்க்கத்தை ஸத்தியோமுக்தி யென்றும், வாமதேவ மார்க்கத்தைக் கிரமமுக்தி யென்றும் சொல்லுவர்.

முட்டையுட் கருவாயிருக்கும் பதத்தில் பக்ஷியும் எறும்பும் சமத்துவமா யிருந்தாலும் "வாரணஞ்செய் உடலிந்திரியாதி யென வந்த காரிய உபாதிகள்" ஏற்பட்டபின், பக்ஷிக்கு எறும்பு மார்க்கமும், எறும்புக்குப் பக்ஷி மார்க்கமும் அனுஸரிக்க இயலுமானதாகுமா? நிற்கத் தெரிந்ததும் தத்தித் தடுமாறி விழுந்துகொண்டு பறக்கும் பறவைக்குஞ்சை, முட்டையை விட்டு வெளிவந்ததும் உறுதியாயூர்ந்துநடக்கும் எறும்பைப்போல் நடக்க வேண்டுமென்றால் இயலுமா? அந்த அபாவ யுக்திக்கு அது ஒத்து நடக்கவில்லை யென்று அதன் இறக்கைகளை யொடித்து அதைக் காலால் நடந்தே காரியத்தைச் சாதித்துக்கொள்ள வேண்டுமென்றால், அது எறும்பு போல் நடக்கும் சக்தி வாய்ந்ததாகுமா? இல்லை, எறும்புக்குத் தான் இறக்கை முளைத்தால் அது கருடனைப்போல் பறக்குமா? எதுவும் அதனதன் பூர்வவாசனைக்குத் தக்கபடி மேலுள்ள விருத்தி நிவிருத்தி மார்க்கத்தை யனுசரிக்குமே யல்லாது, மனிதன் இட்டது சட்டமாய் நடக்கும் பிராணி ஜகத்சிருஷ்டியில் பிறந்தது மில்லை, இனிப் பிறக்கப்போகிறது மில்லை.

குணத்திலும் பிறவிக்குண மென்பதொன்றுண்டு. அந்தக் குணத்தின் முன் பின் நாட்டமறிந்து நடக்க வல்லாரே, அக்குணத்தை வளர்க்க வல்லார். பிறவிக் குருடனுக்கு இருளில் மருளும், அறிவிற் குருடனுக்கு அருளில் தெருளுமில்லை யென்பது வாஸ்தவம். புலியைப்பார்த்து பூனை சூடிட்டுக் கொண்டால் அது புலியாகுமா? கழுதைக்கு சிங்கத்தின் தோலைப்போற்றினாலும் அதன் குரல் மாறுமா? ஆதலால் சுபாவத்தை மனுஷயத்தனத்தால் மாற்றமுடியாது. அறுதியிலது தானாய்ஒடுங்கும்.

சுபாவத்தைக் கெடுத்தால் அது சூந்யத்தில் மறையும். சூந்யத்தைக்கொண்டு இரகஸியத்தையறிய வல்லவரே சுபாவத்தை மாற்று மாற்றலுடையவராவர். "ஒழிவிலோடுக்கம்" பெற்ற உத்தமரான நிருபாதிக நிர்மல சித்தரே சுபாவத்தையழித்துச் செய்யும் ஆற்றலும் தேற்றலும் பெற்றவராவர்.

பக்ஷிக்கூட்டத்தை யெறும்புக்கூட்ட மாக்கப் பார்த்தால் அது பலிக்குமா? காக்கைக் கூட்டத்தைக் கருடன்களாக்க வேண்டுமென்றால் கூடுமா? இஃதெல்லாம் கூடுவிட்டுக் கூடுபாயும் வித்தையில் சேர்ந்தது. அதாவது தேஹாபிமானத்தைவிட்டுச் சாக்ஷி மாத்திரமாயிருந்து செய்யவேண்டிய வேலை.

"பிரம்மாமுதல் எறும்பீறாக உள்ள சரீரங்களில் அமைந்துளதாயும், ஜாக்ர, ஸ்வப்ந, சுஷுப்தியென்கிற மூன்று நிலைகளிலும் தெளிவாய்ப் பிரகாசிப்பதாயும், எந்த ஞானம் (அறிவு அல்லது ஆத்மா) ஏற்றக்குறைச்சலின்றி யமைந்துள்ளதோ அந்த ஞானஸ்வரூபி நானே! (நசத்ருக்பவஸ்து) புலனறிவுக்கெட்டாத அந்த வஸ்து நானேதான் என்கிற திடமானஞானம் எவனுக்கு இருக்கின்றதோ அப்படிப்பட்டவன் சண்டாளனான்போதிலும் அல்லாது பிராமணனானபோதிலும் குரு (அஜ்ஞான அந்தகாரவிலங்கைத் தரித்துப்போக்குவோன்) என்பது என்னுடைய அபிப்பிராயம்" என்று ஸ்ரீ பகவத்பாத சங்கராசார்ய ஸ்வாமிகள், அவரை மறுத்துக்கேட்ட சண்டாளத்மகனான ஈசனுக்கு விடையாய் அளித்த "மநீஷாபஞ்சகம்" என்னும் திவ்ய கிரந்தத்தில் என்றென்றைக்கும் அழியாத அக்ஷரங்களினால் இப்பரதக்கண்டத்தின் சமஷ்டி வித்யா லக்ஷ்மியின் ஹிருதயாகாசத்தில் எழுதி வைத்துவிட்டுப் போயிருக்கிறார். அதுவே இந்தியாவின் சமஷ்டி ஜீவன் உய்யும்வழி. அந்த வழியினின்றும் விலகிப் போகப்போக இந்தியாவுக்கு (இந்தியாவின் சமஷ்டி)க்குறைவேயன்றி நிறைவில்லை.

ஆகையால், ஐரோப்பியனைப்பார்! அமெரிக்கனைப்பார்! இக்கரைக்கக்கரை எவ்வளவு பச்சையா யிருக்கிறதென்று போதிப்பதெல்லாம் வீண் பசப்பு வார்த்தையன்றி வேறல்ல!

உன்னைப்பார்! உன் கண்ணைப்பார்! கண்ணுள் மணியைப்பார்! அம்மணியிற் பாவையாம் புருஷனைப்பார்த்து மனிதரிற் பதராயிருக்கும் நீ உன் பேடித்தனத்தைவிட்டு தீரத்தனத்தைக் கைக்கொண்டு புருஷ சிங்கமாகக் கர்ச்சித்தெழுந்து தாமஸபுத்தியைவென்று ராஜஸத்தை யடக்கியாண்டு ஸாத்விக சித்திபெற்று ஸத்ய சங்கல்பனாய் நித்ய முக்தனாய் விளங்குவாயாக! அப்படி விளங்குவாயானால் உலகமெல்லாம் உன் வழிப்பட்டு நிற்கும்! எழுந்திரு! எழுந்திரு! தூங்காதே! என்று ஆத்மோத்தாரணம் செய்து இந்தியாவின் சமஷ்டி பாவத்தை வளர்க்கவல்ல மஹான் யாரோ அவன் இட்டது சட்டமாய் ஆடும் இந்த மஹத்தான பரதக் கண்டத்தின் சமஷ்டி வாழ்வு!

பாசற்காய்க்காகப் பங்கை விற்றவன் சந்தயாக அறுதியாயுள்ள உன் சுபாவகுணத்தை விட்டு நீக்கி அபாவமான வழியைப்பற்றி நடவென்றால், சொன்னவனுக்கு சொல் நஷ்டம், கேட்டவனுக்குக் கேள்வி நஷ்டமே யன்றி, சமஷ்டி வித்யையாம் தேசவாழ்வு தாழாமல் தாழ்ந்து வர்ழ்வான வாழ்வாம் பெருவாழ்வு பெறுதலில்லை.

சமஷ்டி வித்தையாம் தேசவாழ்வுக்குப் "பற்றற்றார் பற்றுகப்பற்றி யிருந்தா' னோடு சேர்ந்தன்றி மற்றப்படி இந்தியாவில் அதற்கு வாழ்வில்லை.

"வாழ்வான வாழ்வெனக்கு வந்ததடி வாழாமல்,
தாழாமற்றாழ்ந்தேண்டி சற்றுங் குறையாமல்"

என்பதே இந்தியாவின் லக்ஷியமாம்.

இந்தியா தேவி வாழ்வுறத் தேடும் சமஷ்டி புருஷன் "தேச மிறந்தவன்காண், திசை யிறந்

த தேன்கடல்காண்". இவன் எங்கே யிருக்கிருனென்ருல்:—

"ஊசிமுனை யின்ற இல்லாவுறுப் பொருள் காண்" என்று பட்டணத்தடிகள் முதல் இந்தியாவின் ரிஷிகள் எல்லாரும் அநாதிகாலம் முதல் ஓதியிருக்கிருர்கள். அவர்கள் வார்த்தையைக் கேட்பாரில்லை! ஆதலால் தான் பட்டணத்தடிகள் "இறந்த காலத் திரங்கலில்" பொதுப் பிரசங்கப் பொய்வாழ்வில்.

"வார்த்தைத்திறமில்லா மனிதருக்குப்புன்சொல்லாஞ்
சாத்திரங்கள்சொல்லிச் சதிரிழந்துகெட்டேனே"

"மெத்தமெத்தச் சொல்வாக்கில் வேறுமருளடுத்துத்
தத்தித் தலைகீழாய்த் தானடந்தும் கெட்டேனே'

யென்றும்; உலக வாழ்க்கையிலிருந்த காலத்தில்,—

"ஆசாரமில்லா வரசருடன்கூடிப்
பாசாங்குபேசிப் பதியிழந்து கெட்டேனே!—" யென்றும்

"குருமார்க்கமில்லாக் குருடருடன்கூடிக்
கருத்தழிந்து கெட்டேனே!"—யென்றும்

புலம்பி யிருக்கிருர். ஸ்ரீ கோபால கிருஷ்ண கோகலே யவர்கள் ஸ்ரீமான் மஹாதேவ கோவிந்தரானடே யவர்களால், குருமார்க்க தீக்ஷை யளிக்கப் பெற்றவர். ஆகையால் இவர் வாய் பிறப்பாம் வார்த்தைகள் உத்தம லக்ஷியத்திற் குறைவு பட்டால் சத்துக்களுக்கு வருத்தத்தை யுண்டுபண்ணுவதாயிருக்கிறது. ஏனெனில் சத்துக்கள் எவ்வாற்ருனும் பூரண லக்ஷியத்துக்குப் பங்கம் வரப் பேசார்கள்.

"கண்டபுலவர் கனக்கவே தான்புகழ
உண்டவுடம்பெல்லாம் உப்பரித்துக் கெட்டேனே!"

என்று பட்டணத்தடிகளும்,

"மேலவே தானிருந்து வேணமட்டுங் கைகொடுப்பேன்
கீழவே நீயிருந்து தத்திப்பிடி யென்ருள்"—என

ஆனந்தத்தாய்மொழிலும் சொல்லிருக்கக் காணலாம்.

சாதக சாதனங்கள் எப்படி வேண்டுமானலும் மாறுபடலாம். அதனல் குறைவொன்றுமில்லை. ஆனல் லக்ஷியத்துக்குப் பங்கம் வந்தால் அது எல்லாவற்றையும் பாதித்து கடைசியில் பூரணனுபவமும் சித்திக்காது மாயையிற் சிக்கவைக்கும். இந்த உண்மையை இங்கு வற்புறுத்திக் கூறவேண்டிய தவசியமாயிருப்பது பற்றிச் சொன்னேம். மற்றப்படி ஸ்ரீ கோபால கிருஷ்ண கோகலே யவர்கள் செய்த திவ்யப் பிரசங்கம் எல்லாராலும் கொண்டாடப்பட்டதென்றும், கொண்டாடத் தக்கதாயிருந்ததென்றும் நம் உள்ளமுணர்ந்த அபிப்பிராயத்தை யிங்கு குறிப்பிட்டு வைக்கிறேம்.

—:*:—

## THE LATE MAHOPADHYAYA VISVESVARA SASTRIAR.

### காலஞ்சென்றபண்டிரத்நமாப் மஹோபாத்யாய விசுவேசுவரசாஸ்திரியார்.

—(:-:)—

விவேகசிந்தாமணிக்காகவென்று "பாவனேபநிஷத்" "திரிபுராஉபநிஷத்" அன்ன பூர்ணேபநிஷத் இவைகளைப் பரிசிரமப் பட்டுத் தமிழில் மொழிபெயர்த்து ஸ்ரீ மு. கோ. நாராயண ஸ்வாமிஐயர் அவர்களுக்குப் பக்கபலமாயிருந்த மஹோபாத்யாயர் விசுவேசுவரசாஸ்திரியார் அவர்கள் அதிபால்யத்தில் அபாரபாண்டித்தியம் பெற்று விளங்கிக் கொண்டிருந்து இளவயதில்தானே பரகதியடைந்ததைக் குறிப்பிட மிகவிசனிக்கிறேம். காலஞ்சென்றவர் 28-30-வயதுகுட்பட்டவராயிருந்து ஸம்ஸ்கிரதத்தில் மஹாபாண்டித்தியம் உடையவராக விளங்கினர். உபநிஷத் வாக்கியங்களுக்கு வாச்சியார்த்தம் செய்வது மிகவும் கஷ்டம். சாமான்ய பாண்டித்தியம் போதாது. அபார சாமர்த்தியமும் அதிகூர்மையான புத்தியும் புனிதஸமஸ்காரமும் சுத்த ஹிருதயமும் அந்தர்முக சிக்ஷையும் ஒருங்கே யமைந்திருந்தாலன்றி உபநிஷத்வாக்கியங்களின் ஸாரத்தை கிரஹித்து அவற்றின் வீரியம் குறையாமல் வேறுபாஷையில் அவற்றிற்கு வாச்சியார்த்தம்

செய்வது முடியாத காரியமாம். அதுவும் பாவனேபநிஷத், திரிபுரா உபநிஷத் வாக்கியங்களுக்கு அர்த்தம்செய்வது மிகவும் அருமை. ஏனெனில் இவற்றில் கர்மம், உபாஸனே, ஞானம் என்கிற மூன்றும் ஒன்ருய் விளங்க வார்த்தைகளும் வாச்சியங்களும் அமைந்துள்ளன. இவை மந்திர திர்ஷ்டாக்களால் அபரோக்ஷ சாக்ஷாத்காரத்தில் அனுபவித்த அனுபவங் குலேயாமல் சகஜஸமாதியிலிருந் துரைக்கப்பட்ட வாக்கியாதீதமான வாக்கியங்கள் நிறைந்துள்ளன. இவருடைய பாண்டியத்தைப்பற்றி நாம் முதலில் திருவனந்தபுரம் ஆர்க்கியலாஜிகல் சூபரின்டெண்டு ம-ா-ா-ஸ்ரீ தி. அ. கோபிநாதராவ் அவர்களால் கேள்விப்பட்ட பொழுது அவ்வளவாக நம்பக்கூடாமலிருந்தோம். ஆனல் அவரை நேரில்கண்டு சம்பாஷிக்கும்படியான பாக்கியம்பெறவும், அவருடைய மேலான வித்வத் சாமார்த்தியமும், சாதகசாதன முறைகளில் தெளிந்தஞானமும், ஆத்மபுத்தியும், அதிசயிக்கத்தக்கதா யிருந்தது! பண்டிதர்களுக்குரிய குதர்க்கவாத புத்தியும் விசாரக்குறைவும் அவரிடத்தில் சிறிதேனுமில்லை. பரம்பரையான வித்வத் வமிசத்தி லுதித்தவரானபடியால், மீன் குஞ்சுக்கு நீஞ்சக்கற்றுக் கொடுக்கிற தர்மமாய் அவருக்கு வித்தியா சம்பத்தும் விவேகமும் இயல்பாய் வரலாயிற்று. அஃதோடு பாடுபட்டுழைக்கும் குணமும் சேர்ந்திருந்தபடியால் அவருடைய குணமும் மணமும் ஒழுக்கமும் சீலமும், வித்தியாவிஷயத்தில் அவருக்குள்ள உற்சாகமும் மிக மெச்சத்தக்க விதமாயிருந்தது. இவர் திருவனந்தபுரம் ஆர்க்யலாஜிலகில் சூபரின்டெண்டுக்குள் பண்டிதராயிருந்தார். இவர் காலஞ்சென்றதில் இந்தியாவின் கல்விக்குக் களஞ்சியமா யிருக்கும் உத்தம பாத்திரமொன்று நஷ்டமாய்ப் போனதாகச் சொல்லவேண்டும். மூலைமுடுக்குகளிலுள்ள உத்தம வித்வான்களைத் தேடிப்பிடித்து ஊருக்குபகாரிகளாக விருந்துழைக்கச் செய்யவேணுமென்கிற நம் கோட்பாடு சிறக்க இவர் நீடித்திருந்து இவர் பாண்டித்தியம் விளங்க ஊருக்குழைக்கக் கொடுத்து வைக்காமற் போனது நம்முடைய துரதிர்ஷ்டமே.

——:-(o)-:——

## "Tell me Your Friends and I will tell you what you are."

### ஸகவாஸ தோஷம்.

——(:o:)——

(95-வது பக்கத் தொடர்ச்சி)

(10). மக்களை வெளியில் அழைத்துப் போகும் வழியில் உண்டாகும் துர்மாதிரிகளில் காக்கும் முறை.—இவ்வாறு மக்கள் கெடாமல் காத்து வருகையிலும், முன் கூறியபடியே, பெற்ருேர் மக்களை யடிக்கடி வெளியே அனுப்பாமலும், போக விடாமலும், கூத்துக் காலக்ஷேபம் முதலிய காரியங்களுக்கு மக்கள் போகாமலும் கவனித்து வருகையிலும், ஏதோ ஒரு அவசிய முகாந்தரமாக மக்களோடு வெளியேபோகவும், பிரயாணஞ் செய்யவும் நேரிடுகையில், துட்டர் பேசுங் கெட்ட சொற்கள் காதில் விழுவதும், அவர்கள் செய்யும் துட்டச் செயல்கள் கண்ணில் படுவதும் பெரும்பாலும் சகஜம். ஆதால், பெற்ருேர், வீட்டை விட்டுத் தம் மக்களோடு புறப்பட்டது முதல் குறித்த இடத்திற்குப் போய்ச்சேரும் அளவும், அடிக்கடி விசேஷமாய்த் துன்மாதிரி சம்பவிக்கையில், அவர்களுக்குப் பல பொருள்களையும் காண்பித்து, அவைகளைப்பற்றித் தமக்குத் தெரிந்த வரைக்கும் சொல்லி, அவைகளைச் சிருஷ்டித்த, அல்லது, உண்டாக்கக்காரணமாயிருந்த மெய்யங் கடவுடைய வல்லபத்தையும், நன்மைத்தனத்தையுங் கூடிய வரைக்கும் எடுத்துக் காட்டிப் புகழ்ந்து கொண்டாடிக், கண்ணில் படும் ஒவ்வொரு பொருளினும், ஒவ்வொரு செயலினும் நின்று நற்புத்தி, படிப்பினை மக்களுக்குப் போதிக்க வேண்டும். இதனல் அவர்

கள் அந்தத் துர்மாதிரிகளைக் கவனிக்காமலும், சித்திக்காமலுந் தடுக்கலாம்.

(11). பல பொருள்களிலும், செயல்களிலும் நின்று புத்திமதி போதிக்கும் முறை.—இதற்கு உதாரணமாகக் கருங் கல்லில் எடுக்கக் கூடிய படிப்பினை-(1). இஃது, தண்ணீரில் ஊறி மிருதுவாகாமலும் ஒளியில்லாமலும் இருப்பது போலப், புத்திமதிகளுக்கு இணங்காத, அறிவு இல்லாத மட்டி மனிதரும் உண்டு எனவும், (2). இது உடைந்தால் திரும்பவும் சேராதது போலத் துட்ட நேசர் பிறிந்தபின் மறுபடியும் கூடமாட்டார்கள் எனவும் கெட்டவர்களுடைய தன்மையையும், (3). இஃது வெயிலுக்கும் மழைக்கும் அஞ்சாமற்கிடந்து, காற்றினாலும் அசைக்கப்படாமல் இருப்பதுபோல், நல்லோர், இப்பிரபஞ்ச துன்பங்களுக்கு அஞ்சாமலும், துர்மாதிரி யென்னும் சோதனையால் அசைக்கப் படாமலும், தம் நன்னிலையையே கைப்பற்றி வருவார்கள் எனவும், (4). இது உப்புப் போல் தண்ணீரில் கரைந்துபோகாமல் அவ்வளவிலேயே யிருப்பதுபோல, நல்லோர், துட்டப் பெண்கள், ஆடவர்கள் இவர்களுடைய பசப்பு வசனமும், செயலுமாகிய மோகன மயக்கத்தால் நிலைகெடாதவர் ஆவார்கள் எனவும் போதிக்கலாம். அஃதே போல், கல்லெறியும் செயலி லிருந்து கற்பிக்கத் தக்கது:—(1) தின்மை செய்ய மனமில்லாத கல்லானது, ஒருவருடைய கட்டாயத்தால், ஒரு தீமையைச் செய்வது போல், தீயோர் கையில் பட்ட நல்லவர்களும் குற்றஞ் செய்ய ஏவப்படுவார்கள் எனவும், (2) இது எறிகிறவனுடைய குறிப்புக்கும் பலத்திற்குந் தகுந்தபடி பலனளிப்பது போல், ஒரு விஷயத்தில் கொண்ட நோக்கத்திற்கும், கவனத்திற்கும், முயற்சிக்கும் தகுந்தபடி பலனளிக்கும் எனவும், (3)ஒருவனுடைய முயற்சியின்று, இஃது, உயர எழும்பாதது போலக், கடவுளுடைய கிருபை யில்லாமல் நாம் ஒரு விதத்திலும் உயர முடியாது என வும், (4) காய்க்காதமரத்தின் மேல் கல்லெறிதல் இல்லை யென்பது போல், பொருளில்லாத வறிஞரிடத்துக் கள்ளர் அணுக மாட்டார்கள்; ஒருகால் சென்றாலும், வீணை திரும்பும்படியாகும் எனவும், (5) கல்லானது நல்லோர், தீயோர் என எண்ணாமல் காயப்படுத்தி விடுவது போலத், துட்டர்கள் எவருக்குந் தீமை செய்யத் துணிவார்கள் என்றும், (6) பூமியினின்று எழுந்த கல்லானது மறுபடியும் பூமியிலேயே விழுவது போல், பூமியினின்று எழுந்த தேகம் பூமிக்கே திரும்பவேண்டும் எனவும், பல விஷயங்களைப் போதிக்கலாம்.

(12). மக்கள் பள்ளித் தோழர்.—பள்ளிக்கூடத்திற்குப் புதிதாய் அனுப்பப்படும் பிள்ளைகள், அது வரைக்கும் நல்ல பிள்ளைகளுடைய சகவாசத்திலேயே பழகி யிருந்தார்களானால், "கற்றாரைக் கற்றாரே காமுறுவர்" என்றதிற் குறிக்கப்பட்டபடியே நல்ல பிள்ளைகளோடு தான் சிநேகம் செய்ய விரும்புவார்களே அன்றிக், கெட்ட பிள்ளைகளோடு எளிதில் பழக மாட்டார்கள். ஏனெனில் அவர்களுடைய குணம், செயல், சொல், முதலியவை தங்களுக்குப் பிரியப் படா. நல்லொழுக்கத்தில் வளர்க் கப்பட்டவர்களும், துஷ்டப் பிள்ளைகளோடு நின்று அறியாதவர்களும், அநேக விதமான குணம் செயல்களை யுடையவர்களைக் காணும்பொழுது, தங்களை யொத்த குணம் உடையவர்களிடத்திலேயே பழக விரும்புவார்கள் ஒழியக், கெட்ட பிள்ளைகளோடு சேரமாட்டார்கள். என்றாலும், "எறும்பூரக் கல்லுந்தேயும்" என்றபடி, கெட்டவர்களுடைய துட்ட செயல்களையும், சொற்களையும் அடிக்கடி உணர்ந்தும், கண்டும், கேட்டும் வருவதாலும், மனிதசுபாவம் துர்விஷயங்களையே பெரும்பாலும் நாடுவதாலும், இவைகளில் பிரியங் கொண்டு, தங்கள் நற்குணங்களைப் போக்கடித்துத், துர்க்குணங்களைப் பழகும்படி நேரிடும்.

இந்துதேச சரித்திரத்தில் காண்பதுபோல, சிவாஜி யென்பவன், சிறுபோதில், "இராமாயணம்," "மகா பாரதம்" இவைகளில் உள்ள சண்டைகளைக் கேட்டதினாலல்லவோ, சண்டையில் பிரக்கியாதியடைந்தான். அதுபோல, அடிக்கடி காணுங் கேட்கும் விஷயங்கள், மகா சக்தியுள்ளனவராய், சிறுவர்களுடைய மனதைமாற்றி, அவற்றைச்செய்ய ஆசையை யுண்டாக்கித் தீர்மானப் படித்தத் தூண்டுமாதலால், பெற்றோர், தங்கள் மக்கள் அவ்வாறு தீமைக்கு உள்ளாகாமல் தடுக்கும்படி பள்ளிக்கூடம் ஆரம்பிக்கக் குறித்த நேரத்திற்கு முன் அனுப்பாமலும், பள்ளிக்கூடம் கலைந்ததும் உடனே நேரே வீடுவந்து சேரவும் சவனிக்க வேண்டும். ஆனால் அடிக்கடி கண்டு வருகிறபடியே காலை 10-மணிக்கு ஆரம்பமாகும் பள்ளிக்கூடத்திற்கு மக்கள் 8-மணிக்கெல்லாம் போகவிடுவதால் இவர்கள், அங்கு அந்நேரத்தில் வந்திருக்கும் துஷ்டப் பிள்ளைகளோடு பழக இடமுண்டு. நல்ல பிள்ளைகள் சாதாரணமாய், அவ்வளவு சீக்கிரத்தில் பள்ளிக்கு வரமாட்டார்கள். அப்படியும், ஒருவர், இருவர் வந்திருந்தபோதிலும், அவர்கள் தங்கள் அறியாமையாலும், பெற்றோரது அசட்டையினாலும், துஷ்டப் பிள்ளைகளோடு கூடிப்பழக ஆசையினாலும் வந்திருக்கலாம் ஆதலால், அவர்களும் கெட்ட பிள்ளைகளாவார்கள் என்பதற்குத் தடையில்லை. இந்தப் பிள்ளைகளுக்குக் கெட்ட குணங்களில் சில மாத்திரம் இருந்து மற்றவையுங் கற்றுக்கொள்ள, இவ்வாறு பள்ளிக்குச் சீக்கிரமாய் வருகிறார்கள் என்றே சொல்ல வேண்டும்.

(13). மக்களைப் பள்ளிக்குக் குறித்த நேரத்திற்குமுன் அனுப்பியதால் வந்த கேடுகள்.— தமது மக்களை யிவ்வாறு குறித்த நேரத்திற்கு முன் அனுப்பாமல் இருக்கத் தவறியதால், அநேக பெற்றோர் தங்கள் மக்களை வீணே யிழந்து விட்டார்கள். அநேக பெற்றோர் தங்கள் பிள்ளைகள் தங்களுக்கு உதவாமல் செய்துகொண்டார்கள். பலர் தங்கள் பிள்ளைகளை மட்டிகளாக்கி, வித்தையைக் காணில்வெறுப்பும், விளையாட்டைக் கண்டால் விருப்பும் அவர்களுக்குண்டாக்கி, அவர்கள் தங்கள் காலத்தில் மிகவும் வருந்தியுழைத்து, மிக சொற்ப ஊதியத்துடன் ஜீவனஞ் செய்யும் கஷ்டதிசை யடையச் செய்து விட்டதனால், அவர்களால் தங்களுக்குக் கிடைக்கக் கூடிய பல நன்மைகளையுங் கெடுத்துக் கொண்டார்கள். சில பெற்றோர் தங்கள் மக்கள் பள்ளிக்குக் குறித்த காலத்துக்கு நெடு நேரத்திற்குமுன் செல்ல விட்டதனால், அவர்கள் துஷ்டப் பிள்ளைகளோடு கூடிப், பூ, காய், கனி, பறிக்கும்பொருட்டு மரங்களின் மீதேறித், தவறிபோ, கிளை முறிந்தோ கீழே விழுந்து, கை கால்கள் முறிபட்டும், தலை யுடைபட்டும், மறைவான விடங்களில் அடிபட்டும், பற்பல விடங்களில் காயப்பட்டும், தசை கிழிபட்டும், வேதனை யநுபவித்தார்கள். சிலர் அவற்றினின்றும், சுவர்களினின்றும் தவறி, அருகிலுள்ள கிணற்றிலும், குட்டையிலும் விழுந்து இறந்து போனார்கள். சில பிள்ளைகள், விழுந்த அதிர்ச்சியினால், மூளை கலங்கிப் பைத்தியம் பிடித்துத் திரிகின்றார்கள். சில பிள்ளைகள் இதனால் குடல், நரம்பு, இரத்தத்தாரை முதலிய அறுந்து மாண்டார்கள். சில பிள்ளைகள், துஷ்டநேசரோடு சேர்ந்து கிணற்றிலோ, குளத்திலோ, கடலிலோ, விளையாடும் பொருட்டாவது, குளிக்கும் பொருட்டாவது, துணிவெளுக்கும் பொருட்டாவது, மச்சம், நண்டு முதலிய பிடிக்கும் பொருட்டாவது, அவற்றில் இறங்கி, தங்களுடைய சொந்த அஜாக்கிரதையினாலோ, மற்றப் பிள்ளைகளால், விளையாட்டுப் புத்தியினாலாவது, காப்மகாரத்தினாலாவது தள்ளப்பட்டதினாலோ, அந்நேரத்தில் காக்காய் வலி கண்டோ, விழுந்து விருதாவில் தங்கள் உயிரைமாய்த்துக் கொண்டார்கள். சில பிள்ளைகள் துஷ்டப் பிள்ளைகளோடு கூடி, வேடிக்கை, விநோதங்கள் பார்க்கவோ, அல்லது சூது விளையாடவோ, சுரு

ட்டுபிடித்தல் முதலிய துர்ப்பியாசங்களைப் பழகவோ, தோட்டங்களுக்குப் போய்க் காய் கனி திருடவோ, பள்ளிக் கூடத்தை விட்டு வெளியிடங்களுக்குப் போய், மனம்போன ஆட்டமெல்லாம் ஆடித், துர்ப்பழக்கங்களை அப்பியசித்துப் பொழுது போக்கிப், பள்ளியில் இருந்து திரும்புவது போல, நேரத்தின்படியே, வீட்டுக்கு வந்து, அடுத்தநாள் உபாத்தியாயருக்கு ஏதாவது சாக்கு போக்கு சொல்லித் தப்பித்துக் கொள்வார்கள். இவர்கள் ஆட்டுத்தோலைப் போர்த்திய புலிகளைப்போல், உள்ளே துஷ்டர்களும், வெளியே நல்லவர்களுமாய்க் காணப்படுகிறார்கள். இவர்கள் சூது கொஞ்சகாலம் வரைக்கும் தாய்தந்தையருக்கும், உபாத்தியாயருக்கும் தெரியாமல் இருந்த போதிலும், "பல நாளைய திருடன் ஒரு நாளைக்கு அகப்படுவான்" என்பது போலும், "மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம் பறையறைந் தாங்கோடிப் பரக்கும்" என்பது போலும், கெட்டிக்காரன் புளுகு எட்டுநாளைக்குள் வெளிப்பட்டுப் போகும். அப்போது "அகப்பட்டுக் கொண்டான் தீவிட்டிப்பட்டன்" என்று அவனைப் பிடித்துப் பெற்றோரும் உபாத்தியாயரும் சிக்ஷித்து விடுவார்களென்றாலும். அவன் கற்றுக் கொண்ட துர்ப்பழக்கங்கள் அவனை விட்டுத் தொலைவது அருமையாகும். இப்படிப் பட்ட பிள்ளைகளும், திருட்டுப் பிள்ளைகளும் முதன் முதல் கற்றுக் கொள்வது பொய். இந்தப் பொய்யைத் துவக்கத்திலேயே வேரோடறுத்துவிட வேண்டும். சில பிள்ளைகள் ஏற்கணவே பள்ளிக் கூடத்திற்கு வந்துவிடுவதால் அந்நேரத்தில் அங்கு வந்திருக்கும் பிள்ளைகளோடு, கோலி, பம்பரம், முதலிய விளையாடி, அவர்கள் பேசும் அசுசியான கெட்ட வார்த்தைகளை யடிக்கடி கேட்டுப் பழகி, அப்படிப்பட்ட வார்த்தைகளைச் சற்றேனும் கூச்சநாச்சமின்றிப் பேசக் கற்றுக்கொள்ளுகிறார்கள். தூள் போடுகிறவன், சுருட்டு பிடிக்கிறவன், கள் சாராயங் குடிக்கிறவன், கூத்து நாடகம் பார்க்கப் போகிறவன், தாசி வீட்டுக்குப் போகிறவன் ஆகிய இப்பஞ்சபாதகர்கள், உடனிருப்பவனையும் அவ்வாறு செய்ய அழைப்பதும், கட்டாயப் படுத்துவதும் இயற்கையாகையால், அவ்வண்ணமே தூள்போடும் பிள்ளைகளும், சுருட்டு முதலிய பிடிக்கும் பிள்ளைகளும், சூதாடும் பிள்ளைகளும் இவர்களை அழைத்து அதனைச் செய்து பார்க்கக் கட்டாயஞ் செய்து பழக்கப்படுத்தி விடுவதால், இப்பிள்ளைகள் அந்த நினைப்புகொண்டு, பெற்றோருக்கு அநேக சாக்கு போக்குகளைச் சொல்லியும், அவர்கள் கண்ணில் மண்ணைப் போட்டும், தங்கள் துஷ்ட விஷ்டாளைத் தேடி, அவர்களுக்கு முன்னதாகவே பள்ளிக்கூடத்திற்குப் போய், அவர்கள் வரவுக்குக் காத்துக் கொண்டிருப்பார்கள். அந்த நேசரைக் கண்டதும், செங்கதிரைக் கண்டு செந்தாமரை மலருவதுபோல, இவர்கள் முகம் மலர்ந்து, அகங்குளிர்ந்து மேற்கூறிய துர்ப்பியாசங்களைப் பழகித், தங்களுக்கு முன்னிருந்த நற்குணங்களெல்லாஞ் சூரையிட்டு, அவற்றிற்குப் பதில் துற்குணங்களைக் கற்றுத் தேறுகிறார்கள். இவர்கள் இந்தப் படிப்பில்தான் நாளுக்குநாள் விருத்தியாகி வருகிறார்களேயன்றி, இதற்குமுன் கற்றிருந்தவற்றையும் முற்றும் மறந்துவிட்டு, வகுப்பில் பேசுவதும், விளையாடுவதும், விரும்பிக் கற்கும் பிள்ளைகளிடத்தில் குறும்புத்தனஞ் செய்வதும், உபாத்தியாயரை முதலாய்ப் பரிகசித்து, அவருக்குக் கீழ்ப்படியாமலும், கற்பிக்கும் விஷயங்களைக் கவனமாய்க் கேளாமலும் சிரிப்பதும், பேசுவதும், விளையாடுவதும், அடிபடுவதும், சண்டையிடுவதுமாகிய கல்வித்தான் கற்றுக் கொண்டுத் தேறிவருகிறார்கள். பின்னும், கள் முதலிய குடித்து ருசிபார்த்து, பெரியவர்களானால், அப்பழக்கங்களைக் கையாடத் தீர்மானித்து, ஏழைகள், வயதுசென்றோர், பைத்தியக்காரர், துறவிகள், குருபிகள், பிராணிகள், இவர்களுக்குச் செய்யும் அநியாயமும்

கொடுமையுமான செயல்களும், பரிகாசங்களும் பெண்பிள்ளைகள், ஸ்திரீகள், கிழவிகள் இவர்களிடத்துச் செய்யும் கேலியும் சரச வார்த்தைகளும், சேஷ்டைகளும், அவமானமும், நிந்தையும் அனந்தம். அன்றியும், பள்ளிக்கூடத்துச் சுவர்களிலும், விசேஷமாய்க் கக்கில் சுவர்களிலும், உபாத்தியாயரையும், தத்தம் பகைவரையும் தூஷணித்தும், தங்களுக்குள்ள துராசையை வெளியிட்டும், இவர்கள் தீட்டிவைக்கும் அக்கிரமமான படங்களும், எழுதிவைக்கும் உதாசின வார்த்தைகளும், வேறநேக விஷயங்களும், இவ்வள வவ்வளவல்ல. இதனைப் பார்க்கும் நல்ல பிள்ளைகளும் ஒவ்வோர் வேளைகளில் கெட்டுப் போகும்படி நேரிடும். இவைகளையெல்லாம் வாசித்து உணர்ந்த பின்னுவது, பெற்றோர் தங்கள் பிள்ளைகளை ஒருகாலமும் குறித்த நேரத்திற்கு முன் பள்ளிக்கூடத்திற்கு அனுப்ப மாட்டார்கள் என்று நம்புகிறோம்.

(14). மக்கள் பள்ளித் தோழரைப் பெற்றோர் சோதித்து வர வேண்டும் எனல்.—பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளுக்குச் சாதாரணமாய்ப் பள்ளிக்கூடத்துத் தோழர் தாமுண்டு. அப்பள்ளித் தோழனைத், தமது பிள்ளை, வீட்டுக் கழைத்துவர உபாயஞ் செய்து, அவர்களுடைய குணங்களைத் தாய் தந்தையர் சோதித்தறிந்தும், இதர பிள்ளைகளைக் கேட்டறிந்தும், அவர்களிடத்தில் யாதாமொரு கெட்டகுணம், செய்கை, பழக்கம், வார்த்தை யுண்டானால், அவர்களுடைய சவகாசத்தை விட்டு விடப் பிள்ளைகளுக்கு வேண்டிய வகைகளை யெல்லாம் போதித்து, அவர்களுடைய நேசத்தை யிவன் முற்றுந் தொலைத்து விடப் பெற்றோர் தங்களாலான கவலை கொண்டு வருந்த வேண்டும். இதனைத் தமது பிள்ளை மீறி அவர்களுடைய சிநேகத்தைக் காத்து வருகிறான் என்று பெற்றோர் அறிந்தபோது, தமது குமாரனை நன்றாய்த் தண்டித் தடக்க வேண்டும். பெற்றோருக்குப் பயப்படும் பிள்ளைகளைப் பரிகாசஞ் செய்து, தாய் தந்தையரை மீறி நடக்கவும், இஷ்டப்படி திரியவும் துஷ்ட சிநேகர் அவர்களுக்குப் போதிப்பா ரானதால், பெற்றோர் தமது மகன், அவர்களோடு பேசுவதையுந் தடுக்கப் பிரயாசை படவேண்டியது.

(15). மக்களைப் பள்ளிக்கு அனுப்புவது அவசியம் எனல்.—இது விஷயங்களுக்குப் பயந்து சில பெற்றோர் தங்கள் பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்திற் கனுப்பாமல், வீட்டிலேயே, தாங்களாவது, உபாத்தியாயரை வைத்தாவது கல்வி கற்பிப்பார்கள். இதுவும் சரியல்ல. ஏனெனில், இதனால் உலகத்தில் சஞ்சாரஞ் செய்யவிருக்கும் மக்கள் உலகம் இன்னது, கல்வியிலும், மற்றத்திறத்திலும், நமக்கும் பிறருக்கும் உள்ள பேதாபேதம் இன்னது என்றறியாதிருக்கிறார்கள். மற்றப் பிள்ளைகளோடு கலந்து படிப்பதனால் அவர்களை வெல்ல வேண்டுமென்று சிரத்தை கொண்டு படிக்கக் கூடுமாயிருக்கும். இல்லாவிடில், தான் ஒரே வகையாய் நெடு நேரம் படித்து, மெதுவா யெழுதிச் சோம்பனுகிறான். மேலும் உலகம் இன்னதென்று அறியாவிடில் கல்வியினால் மாத்திரம் பயனென்ன? அன்றியும், பள்ளிக் கூடத்திற்குப் போவதினால், உபாத்தியாயர் முதலிய அதிகாரிகட்குக் கீழ்ப்படியவும் குறித்த நேரத்திற் கிரமமாய்ப் பள்ளிக்கூடம் போகும் பழக்கத்தினால் தனது தகுந்த வயதில் உத்தியோக சாலைக்குக் குறித்த நேரத்திலுங் கிரமமாகவும் போகவும், அவ்விடத்திய அதிகாரிகட்குக் கீழ்ப்படியவுங் கற்றுக் கொள்ளுகிறான். மக்கள் கல்வி விஷயத்தைப் பெற்றோர் நாள் முழுதும் கவனிப்பது அசாத்தியமான காரியம். குழந்தைகளைக் கவனிக்கவேண்டிய தாய்மார், மக்களைப் பள்ளிக்கனுப்புவதே நன்மை. இது முதலிய அநேக நன்மைகள் பள்ளிக்கூடம் போவதால் தான் அடையக் கூடுமா யிருக்கின்றன.

(16). பெற்றோர் கவனம்.--ஆதலால், பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்ப வேண்டியது தான். ஆனால் சரியாய்ப் பள்ளிக் கூடம் தொடங்கும் நேரத்தில் பிள்ளைகள் அங்கு போய்ச் சேரும்படி தகுந்த நேரத்தில் அனுப்ப வேண்டியது என்றாலும், 5, 10 முந்தி, பிந்தி, யிருந்தாலும் தப்பித மில்லை. இதனோடு, தமது மக்களது தோழர்களை மாதத்திற்கொரு முறை, அல்லது கூடுமானால், இருமுறை சோதித்துப் பார்த்துப் பிள்ளைகளுக்குக் கட்டு திட்டஞ் செய்ய வேண்டியது பெற்றோர் கடமை. பிள்ளைகள் முதிர்ந்த திசையை யடையும் பரிபந்தம், அதாவது 21 பிராய மாகும் பரியந்தம் அல்லது அவர்களுக்குக் கலியாணமாகும் பரியந்தம் பெற்றோர் இவர்களுடைய தோழமை மட்டில் அதிக எச்சரிக்கையா யிருக்க வேண்டியது. அதற்குமேலும், கூடுமானால், அவர்கள் தோழமையின் அதிகாரத்தைத் தாங்கள் கொண்டிருக்கலாம் என்றாலும், அது அவ்வளவு அவசியமல்ல. ஏனெனில், நல்ல தாய் தந்தையரிடத்துப் பிறந்து, இதுவரையில் நல்லொழுக்கத்தில் நடத்தப் பட்டவர்களும், நல்ல சிநேகரைக் கொண்டிருந்தவர்களும், இதற்கு மேல் தங்களைத் தாங்களே நடத்திக் கொள்ள சக்தியுடைவர்களா யிருப்பார்கள்.—"பெற்றோர் ஒழுக்கம்.'

---

## FLOODS IN THE CAUVERY.
## காவிரியில் பிரவாகம்.

மற்றெவ்வருஷத்தைக் காட்டிலும் இந்த வருஷத்தில் காவிரி நதியில் வெள்ளம் அளவுக்கு மிஞ்சிப் பெருகிவிட்டது. மேற்கு மலைத்தொடரில் அந்த நதி உற்பத்தியாகும் ஸ்தானத்தில் மழை சரமாரியாய்ப் பொழிந்ததே இம்மாதிரியான வெள்ளப் பெருக்கெடுத்ததற்குக் காரணம் என்று தெரிகிறது. காவிரி நதிக்கரையோரமாயிருந்த பற்பல கிராமங்களில் நீர் நிரம்பியிருந்ததாகவும், சிற்சில விடங்களில் குடிசைகள் அவ்வவ்வாறே மிதந்துகொண்டிருந்தன வென்றும், பின்னும் சில விடங்களில் கொஞ்சம் தேகவலிமை கொண்டவர் மரங்களின் மீது ஏறிக்கொண்டிருந்தார்களென்றும் அங்கங்கே பேசிக்கொண்டிருக்கும் சமாசாரங்களினால் தெரிய வருகிறது. காவிரி நதியில் வெள்ளம் கரைபுரண்டு போனதினாலே பொருட்சேதமானதற்குக் குறைவில்லை. இரண்டோரிடங்களில் உயிர்ச்சேதங்களும் விளைந்தன வென்று தெரிகிறது. கும்பகோணம் தாலுகாவிலிருக்கும் கருப்பூரண்டை உடைப்பு உண்டாகிச் சுமார் 100-குடிசைகள் வரையில் பிரவாகத்தில் அடித்துக் கொண்டு போகப்பட்டன; பின்னும் பூர்ணப் பிரவாகமாயிருக்கும்போது கும்பகோணத்திலுள்ள பற்பல வீதிகளெல்லாம் தண்ணீர் வாய்க்கால் போல் ஓடிக்கொண்டிருந்ததென்றும் பிறகு வெகு சிரமப்பட்டு அடைக்கவேண்டி வந்ததென்றும் தெரிந்தது. நதிப்பிரவாகத்தில் பரிசல் கிழக்கரையிலிருந்து மேலக்காவிரிக்குப் போய்க்கொண்டிருந்தபோது கரையண்டை பரிசல் கவிழ்ந்ததோர் விபத்தும் கூடச் சேர்ந்ததென்றால் இவ் வருஷத்துப் பிரவாகம் எத்தன்மையதென்று படிப்போரே யோசித்துக் கொள்ளலாம். மைசூர் சமஸ்தானத்தில் சுமார் எழுநூறு வீடுகள் வரை வெள்ளத்தினாற் சேதமாயின. 800 குடும்பங்கள் நிற்க நிழலின்றியும் உண்ணச் சோறின்றியும் குஞ்சு குழந்தைகள் சகிதமாய் வீதிகளிலும் சாலைப்புறங்களிலும் உட்கார்ந்து தலையிற் கைவைத்து 'நாராயணா' வென்று ஓலமிடுந் துக்கத்தைக் கேட்கும் கன்னெஞ்சும் கரையுமென்பது திண்ணம். காவிரி வெள்ளத்தினால் நேர்ந்த சேதத்திற்கு நிவாரணமாய் ஒரு நிதி மைசூரில் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இதற்கு அவரவர்கள் தத்தம்மாலான வரையில் நன்கொடை யளித்து உபகரித்து வருகிறார்கள். மைசூர் கவர்ன்மெண்டாரே இரண்டாயிரம் ரூபாய் கொடுத்திருப்பதுடன், இன்னும் அந்த சமஸ்தானத்தில் ஜீவகாருண்ய சிந்தைகொண்ட ஜீவாத்மாக்கள் அனைவரும் ஸர்வவியாபகனும் பிரபுவும் கருணாகரக் கடவுளின் திருவிளையாடலோ வென்னவென்று மதித்துத் தம் பிராதாக்களான ஜனங்கள் கண்கசிந்துருகுவதைப் பார்த்து மனந்தாளாது வெதும்பி உதவிபுரிய முன்வந்திருப்பதும் சித்த முத்த சுத்தனை அவ்வம்பலவாணனது திருக்கூத்தே யன்றி மற்றென்னை! யென்று ஒருவர் சுருக்கமாயெழுதி யிருக்கிறார்.

---

